உ

சிவமயம்

மரகதவிநாயகர் துணை

தனவைசியர்களாகிய

# நாட்டுக்கோட்டை

# நகரத்தார் வரலாறும் வேண்டுகோளும்





புதுப்பட்டி

திரு. நாக. ராம. இராமசாமி செட்டியார் அவர்களின்

*1012, பிறைகாண் சதாபிடேக முத்து விழாவில்*

4—5—1989

சுக்ல ஹூ சித்திரை மீ 21உ. வெளியிடப்பெற்றது.

உ

சிவமயம்

மரகத விநாயகர் துணை

# நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு

தனவைசியர்களாகிய நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் பல தலைமுறையாக வாழ்ந்து வந்த காஞ்சிபுரத்திலிருந்து கலியுகாதி 2312 விரோதிகிருது வருஷத்தில் (கி. மு. 789) தெற்கு நோக்கிப்புறப்பட்டு, சோழதேசத்துக் காவிரிப்பூம் பட்டினத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

அப்பொழுது அங்கு அரசுபுரிந்த மனுநீதிச் சோழன் தனவணிகர்களை அன்புடன் வரவேற்று தன்நாட்டிலேயே தங்கி இருக்கச்செய்தான். அத்துடன் அரசவம்சத்திற்கு மகுடம் சூட்டுகிற உரிமையும் ''இரத்தினமகுட வைசியர்'' என்ற பட்டமும் கொடுத்தான். மேலும் தன்நாட்டிற்கே அவர்களை பிரதான பிரஜைகளாக வைத்துக்கொண்டான்.

இவர்கள் குடியிருப்பதற்கு காவிரிப்பூம்பட்டனத்தில், கிழக்கு, மேற்கு தெற்குதெருக்கள் ஒதுக்கிவிடப்பட்டன. இவர்களது மாளிகைகளில் தங்கக்கலசம் வைத்துக்கொள்வதற்கு அவன் அனுமதி வழங்கினான். இவர்களுக்குச் சிங்கக்கொடி விருதும் கொடுத்துக் கௌரவித்தான்.

காவிரிப்பூம்பட்டினத்தின் மூன்று தெருக்களிலும் வந்து குடிஏறிய தனவணிகர் குடும்பங்களின் எண்ணிக்கை எண்ணாயிரமாகுமெனத் தெரிகிறது. சோழநாட்டில் அவர்கள் 1400 ஆண்டுகள் வரையில் நிம்மதியாக வாழ்ந்து வந்தார்கள். கலியுகாதி 3775ல் (சாலிவாகன 596) அச்சமூகத்தினரது வாழ்கைக்கே பேரிடிபோன்ற ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

சோழவம்சத்தில் பூவந்திச்சோழன் என்று ஒரு தறுதலே தோன்றினன். இவன் கொடிய காமாதுரனுயிருந்தான். தனவைசிய பெண்கள் பால் காமமுற்று அவர்களில் சிலரைத் துராகிருதமாய்ப் பிடித்துச் சிறை செய்தான். மானத்தைப் பெரிதாக மதிக்கும் தனவைசியர்கள், இந்த அடாத செயலேக் கண்டு பதை பதைத்து மனம் பொறாது தம் உயிரையேவிடத்தீர்மானித்தார்கள்.

அப்படி எண்ணுயிரம் தனவைசிய குடும்பத்தினர் உயிர் துறந்ததாக சிலாசாஸனங்களில் கூறுகிறது. இப்படி தனவைசியர்கள், பிராணத்தியாகம் செய்து கொண்டகாலம் கலியுகம் 3775, ஆம்வருஷம் என்று கூறப்பட்டிருக்கிறது. எண்ணுயிரம் குடும்பத்தாரும். சிறுவர்களான ஆண்பிள்ளேகளே மட்டும் தம் உபாத்தியாயராயிருந்த ஆத்மநாதசாஸ்திரியாரிடத்தில் விட்டு விட்டு எல்லாப் பொருள்களேயும், அவர் வசமே ஒப்புவித்து, சிசுபரிபாலனமும், மரகத விஞயகர், பூசையும் நடக்கும்படி செய்து விட்டு, உயிர் துறந்து விட்டார்கள் என்று நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரம் கூறுகிறது. இப்படிமானத்திற்காக, உயிர் துறப்பவர்கள் பொதுவாகக் கைக்கொள்கிற அக்கினிப்பிரவேச முறையையே இவர்களும் கைக்கொண்டிருப்பார்களென்று ஊகிக்கிறார்கள்.

ஆத்மநாத சாஸ்திரியிடம் ஒப்படைக்கப்பட்ட சிறுவர்களின் எண்ணிக்கை மேலத்தெரு ஆறுவழியில் அறுநூறு பிள்ளேகளும் தெற்குத்தெரு நான்கு வழியில் நானூறு பிள்ளேகளும் கீழத் தெரு ஏழு வழியில் ஐந்நூற்றிரண்டு பிள்ளேகளும் ஆவர். இவர்கள் ஆத்ம நாதசாஸ்திரியிடம் வாழ்ந்து வந்தார்கள். இதில் கூறப்பட்டிருக்கும் தெருக்கள் எல்லாம் காவிரிப்பூம் பட்டினத்துத் தெருக்கள். ''வழி'' என்று குறிப்பிடப்படுவதெலலாம் நகரத்தார்களது ''கொடி'' வழியைக் குறிக்கும்.

3784ல் பூவந்திச்சோழன் காலமாஞன். அவன் புதல்வன் ராஜ பூஷனனுக்கு முடிசூட்ட வேண்டி வந்தது. மன்னனுக்கு

மகுடம் சூட்டுவதற்காக ஆத்மநாதசாஸ்திரியிடம் இருந்து வந்த தனவைசிய இளைஞர்கள் அழைக்கப்பட்டனர். ஆனால் அவர்கள் அனைவரும் விவாகமில்லாதவர்களாக இருந்தார்கள்

"மனையாளின்றி ஆண்மகன் எக்கருமத்துக்கும் தகுதியற்றவனென்பது". இந்து சமயக் கோட்பாடாகையால் அரசவை அறிஞர்கள் பரம்பரை வழக்கப்படி மன்னனுக்கு மகுடம் சூட்டினான். இவ்வணிக இளைஞர்களுக்கு மணம் முடித்து வைக்கத் தீர்மானித்தார்கள்.

ஆனால் வணிக குலத்தில் பெண் இனமே ஒழிந்து போய் விட்டதே! என்ன செய்வது! அக்காலத்தில் ஈசான்ய சிவாச்சாரியார் என்பவர் வைசியர்களுக்குக் குருவாயிருந்தார். அரசன் அவருடைய ஆலோசனை நாடினான். அவர் அற நூல்களை நன்கு ஆராய்ந்துவிட்டு இவ்வைசிய குமாரர்கள் வேளாள குலப் பெண்களை மணம் புரிந்து கொள்ளலாம் என்று கூறினார். வேளாள குலப்பெரியோர்களும், ஒரு நிபந்தனையின் பேரில் உடன்பட்டார்கள்

வைசியர்களும் அதை ஏற்றுக்கொள்ள, காவிரிப்பூம் பட்டினத்து கார்காத்த வேளாளர் பெண்களை, மேலத்தெரு, ஆறுவழி, அறுநூறுபிள்ளைகளுக்கும், காணியாள வேளாளர் பெண்களை, தெற்குதெரு' நான்கு வழி நானூருபிள்ளைகளுக்கும், சோழிய வேளாளர் பெண்களை, கீழத்தெரு, ஏழுவழி, ஐந்நூற்றிரண்டுபிள்ளைகளுக்கும் விவாகம் செய்வித்தார்கள். பிறகு இவ்வைசியர்கள், எல்லோரும் சேர்ந்து ராஜ பூஷணச் சோழனுக்கு முடிசூட்டினார்கள். இது முதல், சோழ குடும்பத்திற்கும் வைசிய குடும்பத்திற்கும், இடையிலிருந்த மனஸ்தாபங்கள் எல்லாம் தீர்ந்து அரசனது அன்புக்கும், ஆதரவுக்கும் வைசியர்கள் பாத்திரமாகி நிம்மதியாக பூம்புகார் நகரில் வாழ்ந்து வந்தார்கள்.

கலியுகம், 3808 ல் தனவணிகர் சரித்திரத்தில், ஒரு புதியசகாப்தம் பிறந்தது. ''அப்போது பாண்டிய தேசாதி

பதியாயிருந்த, சவுந்திரபாண்டியன் சோழ தேசத்துக்குச் சென்று ராஜபூஷணச் சோழராசனைக்கண்டு, எங்கள் தேசத்திலே, மூன்பு கீர்த்திபூஷண பாண்டிய ராசன் காலத்தில், கடல் பெருகி திருப்புவனம் வரை, அழிந்து போனதினால், நற்குடிகளில்லாதிருந்து இப்போது நற்குடிகள் வரவழைக்கப்பெற்று சுபிட்ச்சமாயிருக்கிறது. இன்னும் சிலநற்குடிகளும் வியாபாரவைசியர்களும் தரவேண்டுமென்று சொல்ல, சில நற்குடிகளையும் கொடுத்து, காவிரிப் பூம்பட்டினத்திலுள்ள இரத்தின மகுட பூபால வைசியர்களை வரவழைத்து, நீங்கள் சிலர்பாண்டிய தேசத்துக்குப் போயிருங்கள் என்று சொல்ல, வைசியர்கள், நாங்கள் மூன்று தெருவாகும். எங்கிருந்தாலும் ஒருமித்திருக்கிறதே! அல்லாது சிலர் இங்கும் சிலர் அங்குமாய்ப் பிரிந்திருக்கமாட்டோம் என்றார்கள்.

அது கேட்டு அரசன் அவ்வாறே மூன்று வைசியர்களையும் சேர்ந்தே போயிருக்கும்படி சொன்னான்.

பாண்டியனிடமும் ''எங்களுக்கு சேர்க்கையாய் குடியிருக்குமிடமும், தேவாலயங்களும், நாங்கள் கூட அழைத்து வருகிற குருமார்களுக்கும் மடாலயங்களும் க்ஷேத்திர சுவாத்தியங்களும் விட்டு அவைகளை நாங்களே பரிபாலித்து வரலாம் என்கிற உரிமையும் வேண்டும்'' என்று கேட்டுப் பெற்றுக் கொண்ட பின் தனவைசியர்கள் பாண்டிய அரசனுடன் புறப்பட்டார்கள்.

இப்படியாகப் புறப்பட்ட தனவைசியர்கள், ''சாலிவாகன சகாப்தம். 629ல் (கலியுகாதி 3800) பிலவங்க வருஷம் வைகாசி மாதம் 21 ஆம் தேதி வெள்ளிக்கிழமையும் அஸ்த நட்சத்திரமும் கூடிய சுப தினத்தில்'' (கி. பி. ௪ ஆம் நூற்றாண்டின் தொடக்கம்) பாண்டிய ராஜனுடன் ''ஓங்காரக் குடி'' என்னும் ஊர் வந்து சேர்ந்தார்கள்.

தன வைசியர்களைப் பாண்டிய நாட்டுக்கு அழைத்துவந்த மன்னனது பெயர் சவுந்திரபாண்டியன் என்று ''நகரத்தார்

சரித்திரத்தில் கூறப்பட்டிருக்கிறது. இவனே அரிகேசரி மாறவர்மனாக இருக்கவேண்டும் என்று சிலர் கருதுகின்றனர்

இந்த மாறவர்மனது காலம். கி. பி. சுமார் 670-710. இவனே, நகரத்தார் சரித்திரத்தில், சவுந்திரபாண்டியன் என்றும் திருவிளையாடல் புராணம், பெரிய புராணம், திருத் தொண்டத்தொகை ஆகியவற்றில் கூன்பாண்டியன், சுந்தரபாண்டியன், நெடுமாறன் என்றும் வேள்விக்குடி சிறிய சின்னமனூர்ச்செப்பேடுகளில், அரிகேசரி, மாறவர் மன் என்றும், பெரிய சின்னமனூர்ச் செப்பேடுகளில் அரிகேசரி, பராங்குசன், என்றும் வழங்கப்பட்ட அரசன் என்றும் சொல்கிறார்கள்.

இவன் மனைவிதான் புகழ்பெற்ற சிவபக்தையான, மங்கையர்க்கரசி ''இவள் ராஜபூஷணச்சோழனது, உடன் பிறந்தாள்'' பூவந்தி சோழனது மகள் என்கிறார், திரு. எஸ். சர்மா.

'ஓங்காரக்குடி' என்னும் ஊரின் தற்போதையப் பெயர் விளங்கவில்லை. இப்போது உள்ள காரைக்குடிதான் அது என்கிறார்கள். 'ஓங்காரக்குடி' காரக்குடியாகி பின் காரைக்குடியாக உள்ளது.

''சவுந்தரபாண்டிய ராஜன்'' தான் முன்பு வாக்களித்த படியே தனவைசியர்களைப் பாண்டிய நாட்டில் கடலுக்கு மேற்கு, வைகைக்கு வடக்கு, பிரான்மலைக்குக் கிழக்கு, வெள்ளாற்றுக்குத் தெற்கு, என்கிற இந்த நான்கு எல்லைக்கு உட்பட்ட பிரதேசம்,வேளாளர் பூமியாய் இருப்பதனால் நீங்கள் மூவகையாரும் இங்கே குடியேறி, வசித்திருங்கள் என்று சொல்லி குடியமர்த்தினான்.

இப்போது செட்டிநாடு என்று அழைக்கப்படும் பிரதேசம் அந்த நான்கு எல்லைகளுக்குள்தான் இருக்கிறது.

சவுந்தரபாண்டிய மன்னன் அரியூர், சுந்தரபட்டினம், இளையாற்றக்குடி, ஆகிய மூன்று நகரங்களும். சுந்தரப் பட்டினம் கோயில், இளையாற்றக்குடிக்கோயில், பிரான்மலைக் கோயில், ஆகிய மூன்று கோயில்களையும், தனவைசியர்களுக்கு விட்டுக்கொடுத்து கூட அழைத்து வந்திருந்த ஆச்சாரியர் களுக்குக் குரு ஸ்தானங்களும் செய்து சுகசீவிகளாயிருக்கும் படி கட்டளையிட்டுப் பின்னர் மதுரைநகரம் சென்றான்.

''பின்பு வைசியர்கள் தாங்கள் மூன்று வகுப்பாயுள்ள, வேளாளர் குலத்தில் கல்யாணம் செய்திருந்ததால் எப் பொழுதும் ஒற்றுமையாயிருப்பது முடியாதென்று'' மேலத் தெரு ஆறுவழியாருக்கு அரியூர் நகரமும் பிரான்மலைக் கோவிலும் தெற்குத்தெரு நான்கு வழியாருக்கு சுந்தர பட்டினமும் அவ்வூர்க் கோவிலும், கிழக்குத்தெரு, ஏழு வழி யாருக்கு, இளையாற்றக்குடி நகரமும், அவ்வூர்க்கோவிலும் உரிமையுள்ளவைகளாகப் பகிர்ந்துக்கொண்டு, அவ்வூர்களில் வாழ்ந்து வரலானார்கள். இவர்களுக்கு முறையே அரியூரார் சுந்தரத்தார் இளையாற்றக்குடி நகரத்தார் என்ற பெயர்கள் வழங்கலாயின!

இதில் இளையாற்றக்குடி நகரத்தாருக்கு மட்டும் நாட்டுக் கோட்டை நகரத்தார் என்று பெயர் வந்தது.

இப்படி குடியிருந்து வாழ்ந்து வருங்காலத்தில் தனவைசி யர்களுக்கு மீண்டும் ஒரு சோதனை வந்தது.

சாலிவாகன சகாப்தம் 1083-ல் பூங்கொன்றை நாட்டு. வேலங்குடிமாணிக்கப் பெருந் தெருவில் வசித்துக் கொண்டி ருந்த நேமங் கோவிலைச் சேர்ந்த இளநலமுடையான் முத்து விரப்ப செட்டியார் குமாரனாகிய அருணாசலம் செட்டி யார் என்பவருடைய புத்திரி ஐந்து வயதுள்ள, முத்து மீனாட்சி என்னும் பெண்ணை காருண்யபாண்டிய அரசன். வேட்டைக்கு வந்த காலத்தில் நகர்ப்புறத்திற்கண்டு'' எடுத்து

தன்வாகனத்தில் ஏற்றிக்கொண்டு தனது நகரத்துக்குப்போய் சேர்ந்தான்.

ஐந்து வயதுள்ள ஒரு சிறுபெண்ணை அரசன் எதற்காக எடுத்துச் சென்றான் என்பது பற்றி, நகரத்தார் சரித்திரத்தில் ஒன்றும் கூறப்படவில்லை.ஆனால் அரசன் அப்பெண்ணை எடுத்து சென்றதைப்பற்றி தனவைசியர்கள் தப்பாக அர்த்தம் செய்து கொண்டுவிட்டார்கள்.

ஒன்பது கோயில் நகரத்தாரும் சேர்ந்து கூட்டமாகக் கூடி பாண்டியராஜனிடத்துக்குச் சென்று அப்பெண்ணை விட்டுவிடும் படி கேட்டார்கள். பாண்டியன் ''உங்கள் பெண்ணென்று தெரிந்திருந்தால் எடுத்து வந்திருக்கமாட்டேன் என்று வருந்தி அவளை அவர்களுடன் அனுப்ப முன் வந்தான். ஆனால், ''அப் பெண்ணை உங்களுடன் அனுப்பினால், கொலை செய்து விடுவீர்களென்று பலரும் சொல்லுகிறார்கள். அப்படிக்கொன்ற தாகத் தெரிந்தால் அந்த ஒரு தலைக்கு எட்டுத்தலையும் எண்ணா யிரம் பொன்னும் உங்களிடத்தில் வாங்குவோம் ஜாக்கிரதை'' என்று சொல்லி அப்பெண்ணை அவர்களுடன் அனுப்பி வைத்தான்.

முத்துமீனாளை இப்படி திரும்ப பெற்றுக்கொண்டு வந்த தன வைசியர்கள் வழியிலேயே ஓரிடத்தில் தங்கி பிறன் கைவசப்பட்ட தம்முடைய பெண்ணை இனத்தில் சேர்த்துக் கொள்வது இழுக்கு என்று தீர்மானித்தார்கள். அந்த அறியா குழந்தையை ''சாதி நியாய முறைப்படி வானுலகம் சேர்ப்பித்து'' விட்டு, ஊர் வந்து சேர்ந்தார்கள்.

ஊர் திரும்பியதும் தங்களுக்குள் ஒரு சாதிக் கூட்டம் கூட்டி, ''அரசன் ஆணையை மீறி நடந்தது குற்றம் இதற்கு ஈடாக நாம் 8 தலை கொடுக்கவேண்டுமே! என்ன செய்வது என்று ஆலோசித்தார்கள்.'' நம்மில் வழிக்கொரு தலைகொடுப் போம்'' என்று முடிவுசெய்தார்கள் 7 வழிக்கு 7 தலைகள்தானே

கொடுக்கலாம். 8-ஆவது தலை கொடுப்பது யார்! என்கிற பிரச்சனை எழுந்தது. ஏழு வழியாரில் ஒரு வழியாராகிய இளையாற்றங்குடி, இரணியூர், பிள்ளையார்பட்டி என்று சொல்லப்படுகிற மூன்று கோவிலாரும் சேர்ந்து ''எங்கள் வழி ஒன்றாயிருந்தாலும், கோயில் மூன்றாயிருக்கிறதால் நாங்கள் தான் ஒரு தலை அதிகமாகத்தர வேண்டும்'' என்று சொல்ல அப்போது இளையாற்றக்குடி கோயிலில் ஒருபிரிவினராகிய ஒக்கூருடையார் எழுந்து ''அதிகமாகக் கொடுக்க வேண்டிய ஒரு தலையையும் நாங்களே கொடுக்கிறோம் மானம் பெரிதே யன்றிப் பிராணன் பெரிதல்ல, கோயில் குரு ஸ்தானங்களில் விபூதி முதலான சகலமரியாதையும் முதலிலே எங்களுக்குச் செய்வதாய் தனவைசியர் எல்லோரும் ஒப்புக்கொண்டார்களே யானல் அதுவே எங்களுக்குப் போதும் என்று கூறினர்கள்.

அவ்வாறே மற்றவர்களும் சம்மதித்து எல்லோரும் பாண்டிய அரசனையடைந்து தாங்கள் அவனது ஆணையை மீறி நடந்ததைக்கூறி அதற்கு அவன் விதிக்கும் தண்டனையை ஏற்பதற்குச் சித்தமாக இருப்பதாகவும் ''எட்டு தலையும் 8000 பொன்னும்'' கொண்டுவந்திருப்பதாகச் சொன்னர்கள்.

அதுகேட்ட அரசன் மிகவும் வருத்தமுற்று ''என்னுடைய செய்கையினல் ஒரு பெண்பழி ஏற்பட்டதேபோதும், இனி உங்கள் தலைகளையும் வாங்கி நான் இன்னும் அதிகப்பழிக்கு ஆளாக வேண்டாம். நீங்கள் தலையும் தரவேண்டாம். பொன்னும் தரவேண்டாம் போய் வாருங்கள்'' என்று சொல்லி அனுப்பிவிட்டான்.

அரசனது மன்னிப்பும் பெற்ற பிறகு தன வைசியர்கள், தாங்கள் புரிந்த பாவச்செயலுக்கு ஆண்டவனின் மன்னிப்பையும் பெற முடிவு செய்து ருத்திரபசுபதீசுவரருக்குத் திருப்பணிகள் செய்து தடாகம் உண்டாக்கித் திருவிழாவும் நடத்தி அந்தத் தருமம் எக்காலமும் நடக்கும்படி க்ஷேத்திர சுவாத்தி

யங்களும் வழங்கிவிட்டு இனிப்பூங்கொன்றை வேலங்குடியில் குடியிருக்கலாகாதென்று தீர்மானித்து அவ்வூரை விட்டு, அவர்கள் எல்லோரும் மாற்றூர் முதலிய இடங்களில் வந்து குடியிருப்புகளை ஏற்படுத்திக் கொண்டார்கள்.

பூர்வீக காலம் தொட்டு நகரத்தார்கள் சைவ நெறியைக் கடைப் பிடிப்பவர்களாக இருந்திருக்கிறார்கள். ஆதியில், நாகநாட்டு சாந்தியாபுரியில் இருக்கும்போது இவர்கள் பூசித்த மரகத விநாயகர் விக்கிரகம் இன்றும் நாகர்கோயிலில் அரியூர்ப்பட்டணத்து வைசியர்களால் கோயில் அமைக்கப் பெற்று பூஜிக்கப்பெற்று வருகிறது.

சாலிவாகன சகாப்தம் 1210-ல் சர்வதாரி வருஷத்தில், அரியூரில் ஒரு கலகம் ஏற்பட்டது. கலகத்தில் அரியூர்ப் பட்டணம் அழிய அந்த ஊரிலிருந்த மேலைத்தெருவாராகிய 64 வைசியர்கள், மலையாளம் போய்ச்சேர்ந்து கோட்டாற்றங் கறையில் குடி ஏறினார்கள் இப்போது மரகதவிநாயகர் சிலை இவர்களிடத்தில்தான் இருக்கிறது.

கிறிஸ்து பிறப்பதற்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலேயே தனவணிகர் கடலாட்சி செய்து மரக்கலமேறிச் சென்று பொருளீட்டினர். அவர்களே கடல் வணிகத்தின் நாயகர்களாக இருந்தார்கள்.

கடல் வாணிகம் ஆபத்து நிறைந்ததாக இருந்தது. கடற் கொள்ளையர்கள் கடலில் பெரும் துன்பம் கொடுத்தார்கள். இதனால் வணிகர்கள் குழுக்களாகவே இருந்தார்கள். இப்படி இருந்த நானாதேசிகள் அஞ்சு வண்ணம், மணிக்கிராமம், நகரம் முதலிய குழுக்களைப்பற்றி பல கல்வெட்டுகள் கூறுகின்றன.

மைசூர் கல்வெட்டு நானாதேசிகள் குழுவை பதினெட்டுப் பட்டணங்களும் முப்பத்திரண்டு வீனராபுரமும் ஐந்நூறு வீரசா சனங்களும் பெற்றவர்'' என்று கூறுகிறது.

நானுதேசிகள் சேர,சோழ,பாண்டிய, மலேய, மகத, கோசல, சௌராட்டிர, தனுட்ச, குறும்ப, காம்போச, கௌளலம்பகர்ண ஸ்திரிராஜ்ய முதலான நாடுகளுக்கு நிலவழியாகவும் நீர்வழி யாகவும் சென்று யானேகளேயும் குதிரைகளேயும் இந்திர நிலம் சந்திரகாந்தம், முத்து, அணிகலம், வயிரம், வைடூரியம் கோமேதகம், புஷ்பராகம், பத்மராகம், பவளம், மரகதம முதலான மணிகளேயும், ஏலம், இலவங்கம், அகில், சந்தனம் கற்பூரம், கஸ்தூரி, குங்குமம் முதலாம் நறுமணப் பொருள் களேயும் விற்று அவற்றிற்கு ஈடாக அங்கு கிடைக்கும் அரும் பொருள்களே, வாங்கிக் கொண்டு, வந்து சேர்வார்'' என்று அக்கல்வெட்டு கூறுகிறது.

சுமத்ராவில், லோபோ - டோவா - என்கிற இடத்தில் கி. பி. 1088 ல், வெட்டப்பட்ட கல்வெட்டு (திசை ஆயிரத் தைந்நூற்றுவர்) என்ற வணிகக்குழுவினர் அங்கே, இருந்த தாகக் கூறுகிறது.

நானு தேசிகள் குழுவினர் கடற்கொள்ளேயரிடமிருந்து, பாதுகாத்துக்கொள்ள வீரர்களேயும் அழைத்துச் சென்றார்கள். போகுமிடங்களில், வாணிபம் செய்வதுடன் நின்று விடாமல் பல திருப்பணிகளும் செய்தார்கள். பர்மாவில், பகவான் என்ற இடத்தில் உள்ள கல்வெட்டு:' பக்கம் ஆன அரி வர்த்தனபுரத்து (அரிவர்த்தனபுரம்) நானு தேசி விண்ணகர். ஆழ்வார் கோயில், திருமண்டபமும் செய்து, திருக்கதவும் இட்டேன், மலேமண்டலன்னுத்தூய மகோதையார்பட்டணத்து ஈராயிரம் சிறியனுன கிருபசேகர நம்பியோன்,'' என்று கூறுகிறது.

மைசூரில் கிடைத்த ஒரு கல்வெட்டு நானுதேசிகள் குழு பற்றிய பல அரிய செய்திகளேச் சொல்கிறது.'' ஐந்நூற்றுவர், மெய்கீர்த்தி'' என்று அதற்குப் பெயர்.

நானுதேசிகள் யார்? யார் என்றும் இந்தக்கல்வெட்டு' கூறுகிறது. அதில், 'செட்டி, செட்டிபுத்திரர்'' என்று பெயர் களும், வருகின்றன.

அஞ்சுவண்ணம் என்னும் குழு பற்றிய கல்வெட்டின் வாசகம் இது. 1) கோவாநலச் செட்டி. அஞ்சு வண்ணம் கூட்டம், மணிக்கிராமத்தார். 2) மகோதையார் பட்டணத்து இரவிக்கொற்றய சேரமா உருவாக, பெருஞ் செட்டிக்கு மணிக் க்ராமப்பட்டம் கொடுத்தோம்.

பூம்புகார் நகரம் பழங்காலத்தில், ''நகரம்'' அல்லது பட்டினம் என்று வழங்கப்பெற்றது. அதனுலேயே, அங்கு வசித்த வணிக மக்கள் பிற்காலத்தில், தென்னுடு வந்ததும் நகரத்தார் என்று அழைக்கப்பட்டனர்.

பூம்புகார் நகரத்தில் 1463 ஆண்டுகள் தனவணிகர்கள் சீரும் சிறப்புமாக வாழ்ந்தார்கள். அப்போது அவர்கள் எட்டாயிரம் குடியினர் இருந்தார்கள்.

இவர்கள் சிவநெறிச் செல்வர்களாக, இருந்தார்கள். ஆதி முதல் நிறைய முடிவைத்து, எப்போதும், தலைப்பாகை கட்டி, காதுகளை வளர்த்து வண்டிக்கடுக்கனிட்டு, மூன்று விரற்பட அழியாது, திருநீறுபூசி, ஆடையைக் கொய்து கட்டி மடி வைத்து அதில் திருநீற்றுப் பையும் செபமாலையும் வைத்து வாழ்ந்தார்கள். அவர்கள் கட்டிக்கொண்டிருந்த தலைப்பாகை ஒரு சாண் அகலமும் 18 முதல் 24 முழம் நீளமும் இருந்ததாம்,

''மாராயம்'' என்று ஒரு சொல் தொல்காப்பியத்தில் வருகிறது. மாராயம் என்பது அரசரிடம் பெறும் சிறப்பாகும். அக்காலத்தில் அரசன் வணிகருக்கு எட்டி, காவிதி, போன்ற பட்டங்களை அளித்தான் இந்த எட்டிப்பட்டத்தைப் பெண்கள்கூட பெற்றிருந்ததாக, கல்வெட்டு இருக்கிறது, எட்டி என்பதுதான் பிற்காலத்தில், செட்டி என்று மருவிற்று என்

கிறார்கள். மாணிக்காட்டி என்ற,ஒரு வணிகன் பெயர் கல் வெட்டில் இருக்கிறது.

செட்டி என்ற சொல்தான் வடநாட்டில் 'சேட்டு' என்று வழங்கப்பெற்றது. வடஇந்திய மொழிகளில், பலவற்றில், ''எ'' கரம் இல்லே, ஏகாரந்தான் உண்டு ''செட்டியே'' பின்னல் ''சேட்டு'' எனத்திரிந்தது.

வணிகன் என்பதையே பனியன் என்று வட நாட்டில் குறிக்கிறார்கள். காந்தியடிகள் இந்தபனியா இனத்தைச் சேர்ந்தவர். ''பனிய'' என்ற சொல் வேதத்திலேயே காணப் படுகிறது.

யங் இந்தியாவில். (பக் : 334) காந்தியடிகள், செட்டி நாடு மக்களுக்கு சில அறிவுரைகள் எழுதியிருக்கிறார். அதில் உங்களேப் போல் நானும், ஒரு செட்டி என்று குறிப் பிட்டிருக்கிறார்.

பாண்டிய நாட்டுக்கு வந்தபோது, தனவணிகர்மனம் மிகவும், நொந்து போயிருந்தது, அரசசகவாசம் தங்களுக்கு ஏற்றதல்ல என்று அனுபவம், அவர்களுக்கு உணர்த்தி விட்டது. அரசர்களே அண்டி வாழவே, அவர்களுக்குப் பிடிக்காமல் போயிற்று. அதனுலேயே, பாண்டிய ராஜ தானி யாகிய மதுரைக்கு செல்லாமல் வடவாற்றுக்கும், வைகைக் கும் இடையில் தங்கி விட்டார்கள், அதுமட்டுமல்ல மாதா, பிதா, குரு, தெய்வம் முதலிய பெரியோர்களுக்கு மட்டும், வந்தனே வழிபாடு செய்கிறதேயன்றி, அரசர்களே யும் உத்தியோகத்திலிருக்கிற, பிராமணர்களேயும் மற்ற எவரையும், வணங்குவதில்லே' என்று புது சமுக நடை முறையை வகுத்துக் கொண்டார்கள்.

காவிரிப் பூம்பட்டிணத்திலிருந்து வந்து ஏழு பிரிவினரும் முதன் முதல் இளையாற்றங்குடியில் ஒன்றாக குடிஏறினர்கள் என்றும் இங்கிருந்துதான் பிற்காலத்தில் மற்ற ஆறு ஊர் களுக்கு பிரிந்து போனார்கள் என்றும் கூறுகிறார்கள். பிறகு இன்னும் இரண்டு பிரிவினர் பிரிந்துபோக மொத்தம் ஒன்பது ஊர்காரர்கள் ஆனார்கள்.

இளையாற்றக்குடி, பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டத் தில் திருப்பத்தூர் வட்டத்தில், கிழச்சிவல்பட்டியிலிருந்து 3. கி. மீ. தொலைவில் ஆவனிப்பட்டி சாலையில் இருக்கிறது.

இளையாற்றங்குடியில் தங்கிய ஏழுபிரிவினர் (1) ஒக்கூரு டையார். (2) அரும்பூர்கிழார் (3) பெருமருதூரடையார் (4) கழனிவாசற் குடியார் (5) கிங்கிணிக்கூருடையார். (6) பேரச்செந்தூருடையார் (7) சிறுசேற்றுருடையார். பிற்காலத் தில் இதிலிருந்து பிரிந்து சென்ற இருபிரிவினர் திருவேட் பூருடையார், இதில் அரும்பூர்கிழார். என்ற பிரிவுக்கு பட்டணச்சாமியசர் என்று ஒரு பெயரும் உண்டு. திருவெண் காடர் என்ற பட்டிணத்தார் இந்த பிரிவில் வந்தவர் என்று சிலர் கூறுவர்.

இளையாற்றகுடிகோயிலார் ஏழுபேரும், திருவேட்பூரு டையார் என்ற சகோதரர்களும் பலதலைமுறைகளாக இந்த இளையாற்ற குடியிலேயே, வாழ்ந்து வந்தார்கள். இவர்கள் ஏழுபேரும் தத்தம் வகுப்புக்கென்று ஒரு ஊருணியும், பிள்ளையார் கோயிலும், அமைத்துக் கொண்டு வாழ்ந்தார்கள். இவர்கள், அனைவரும். நித்யகல்யாணி அம்மையையும், கைலாசநாதரையும், வழிபட்டு வந்தார்கள்.

இளையாற்ற குடியில். இவர்கள் கட்டிய வைணவ கோயில் ஒன்றும் இருக்கிறது. எம்பெருமான் விண்ணகரத் திலுள்ள, திருமால், என்று கல்வெட்டு கூறுகிறது.

காஞ்சி காமகோடி மடத்து 65 வது பீடாதிபதியாக' இருந்தபகா தேவேந்திரசரஸ்வதி சுவாமிகளின் சமாதி இங்கே இருக்கிறது.

மாற்றூர்கோயிலின், முதற்பிரிவினர் உறையூருடையார். உறையூர் அக்காலத்தில், பிரம்பூர் நாட்டைச் சேர்ந்திருந்தது, சோழ நாட்டு உறையூரில், குடியேறியிருந்த காரணத்தால் பாண்டிய நாட்டுக்கு வந்த நகரத்தாரில் ஒரு பிரிவினர். உறையூருடையார் என்று அழைக்கப்பெற்ருர்கள்.

மாற்றூர் கோயில் காரைக்குடிக்கு கிழக்கே ஆறு மைல் தூரத்தில் இருக்கிறது. இந்தக் கோயிலைச் சேர்ந்தவர்கள் உறையூருடையார் அரும்பாக்கூருடையார் மணலூருடையார் கண்ணூருடையார் மண்ணூருடையார். கருப்பூருடையார், குளத்தூருடையார். ''கேரள சிங்கவளநாடாகிய பிரம்பூர் நாட்டில் மாற்றூரான வீரபாண்டியபுரம் உடையார்'' என்று இவர்கள் குறிக்கப்படுகிருர்கள். இந்தக் கோயில் சித்தர்களால் பூஜிக்கப்பட்டது. இறைவன் ஐந்நூற்றீசர் இறைவி பெரிய நாயகி இந்த இறைவன் பெயர் திசையாயிரத்து ஐந்நூற்றுவர் என்ற பெயரை நினைவுபடுத்துகின்றது.

வைரவன்பட்டி கோயில், காரைக்குடிக்கும், திருப்பத்தூருக்கும் இடையில் பிள்ளையார் பட்டிக்கு எதிரில் இருக்கிறது. இந்தக் கோயிலைச் சேர்ந்த பிரிவினர் சிறு குளத்தூருடையார், கழனிவாசலுடையார், மருந்தேந்திரபுரமுடையார், கேரள சிங்கவளநாடாகிய ஏழகப் பெருந்திருவான வீரபாண்டியபுரமுடையார் என்று இவர்கள் குறிப்பிடப்படுகிறார்கள்.

இந்தக்கோயிலுக்குத் தலபுராணம் இருக்கிறது. இறைவன் சந்நிதியில தெய்வநாயகர் என்று ஒரு உருவச்சிலை இருக்கிறது இவர் வழியினர் தெய்யனார் வகுப்பு என்று வழங்கப்படுகின்றனர். இறைவன் பெயர் வளரொளிநாதர் அம்மை வடிவுடையம்மை.

நேமம் குன்றக்குடி-கீழச்சிவல்பட்டி வழியில் இருக்கிறது. சிறிய ஊர் இங்குள்ள கோயிலை, ஜெயங் கொண்ட சோழன் என்பவன் கட்டினனும். இறைவனுக்கு ஜெயங்கொண்ட சோழர், என்று பெயர். இறைவி சௌந்தர நாயகி அழகிய நாச்சம்மை. கேரள சிங்கவள நாட்டில் நேமமாகிய, குல சேகரபுரத்தில், தேனுறுபாயும். இனநல்லமுடையார்'' என்று இக்கோவிலார் குறிக்கப்படுகிறார்கள். தே னு றுபாயும், இளநலமுடையாருக்கு, இந்த நேமம், கி.பி 8–ம் நூற்ருண் டில், சௌந்தர பாண்டியனுல் விட்டுக் கொடுக்கப்பட்டது. இக்கோயிலுக்கு பக்கத்திலேயே பூக்காடு இருக்கிறது. தேனுறு தோன்றுகிறது. அங்கே மதுநதிசுவரார் கோயில் இருக் கிறது. பாடுவார் முத்தப்ப செட்டியார் இந்த ஊர் அருகில் உள்ள கீழச்சிவற்பட்டி ஊரைச் சேர்ந்தவரே. இவர் ஜெயங் கொண்ட சோழீசர் பேரில் பிள்ளைத்தமிழ், ஊசல், சதகம், பதிற்றுப்பத்தந்தாதி பாடியிருக்கிறார்.

இலுப்பைக்குடி, காரைக்குடி–மாத்தூர் சாலையில் இருக் கிறது. இதுவும். சிறிய ஊர் தான். இங்கே உள்ள இறை வன் தான் தோன்றீசர். இறைவி, சவுந்தரநாயகி இதைச் சார்ந்த பிரிவினர் கேரள சிங்கவள நாடாகிய பிரம்பூர் நாட்டில் இலுப்பைக்குடியான சூடாமணி புரமுடையார் எனப்படு வார்கள்.

பள்ளத்தூருக்கு தெற்கே இரண்டு மைல் தூரத்தில், குன்றக்குடிசாலையில், இருக்கிறது சூரைக்குடி கோயில். இந்தக் கோயிலைச் சேர்ந்தவர்கள். புகழ் வேண்டியாக்க முடைய நகரத்தார்'' என்று அழைக்கப்பட்டார்கள், சூரைக் குடிக்கு தேசிக நாராயணபுரம் என்று ஒருபெயர் இருந்திருக் கிறது.

னோட்டையூரின், ஒரு பகுதியாக இருக்கிறது. வேலங்குடி கோயில், மிகபழமையான கோயில். முன் இந்த கோயில்,சற்று தூரத்தில், வடதிசையில் இருந்ததாம். சிவன் கோயிலுக்கு மேற்கே மகாலட்சுமி சமேதராக பெருமாள் கோயில் கொண்டிருக்கிறார். இந்தக் கோயிலேச் சேர்ந்தவர்கள் பாலையூர் நாட்டில் கழனி நல்லூர் கோயிலுடையார் என்று அழைக்கப் படுகிறார்கள். இறைவன் பெயர் சண்டிசுவரர் இறைவி காமாட்சியம்மை, கழனி நல்லூர், தேசிக நாராயண புரத்தைச் சேர்ந்தது.

இரணியூர் கீழச்சிவல்ப்பட்டிக்கு அருகில் இருக்கிறது. திருவேட்பூருடையார் இருவரில் மூத்தவழி வந்தவர்கள் இந்த ஊர்க்காரர்கள். கோயில் மிக பழையது. கர்ப்பக்கிருகத்திலும் பிரகாரங்களிலும், ஏராளமான கல்வெட்டுக்கள் இருக்கின்றன அறுநூறுக்கு மேற்பட்ட அறச்செயல்களை குறிக்கும் கல் வெட்டுகள் இ*த ஊரில் இருந்தனவாம். பக்கத்திலுள்ளது நீல மேகப்பெருமாள் ஆலயம் காளியம்மன் கோவில்.

இரணியூர் சிவன் கோயில் இறைவனின் திருநாமம் ஆட்கொண்டநாதர், இறைவி சிவபுரத்தேவி, காரைக்குடி-திருப்பத்தூர்சாலேயில், குன்றக்குடிக்கும் வைரவன் பட்டிக்கு மிடையில் இருக்கிறது. பிள்ளேயார்பட்டி திருவேட்புருடையாரில், இளேய வழிவந்தவர்களின் கோயில் இது. இந்த இரு சகோதர மக்களிடையே பெண் கொடுக்கல்—வாங்கல் கிடையாது. இக்கோயிலாருக்கு கல்வாசல் நாட்டில் இளையாற்றக் குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மநதங்குடியான ராச நாராயணபுரம் உடையார் என்று பெயர்.

இளையாற்றக்குடி உள்ள பகுதிக்கு முன்னுளில் கேரள சிங்கவள நாடாகிய கல்வாசநாடு என்று பெயராம்.

நகரத்தார் கோயில்கள் ஒவ்வொன்றிலும் ஒரு புத்தகம் இருக்கிறது. அதில் அந்த கோயிலே சேர்ந்து வாழும் பிரிவினர் எல்லோரும் புள்ளிக் கணக்கில் குறிக்கப் பெறுகிறார்கள். திருமணமாகாதவர்கள் அரைபுள்ளி என்றும் ஆனவர் ஒரு புள்ளி என்றும் விதவையானவர் அரைபுள்ளி என்றும் குறிக்கப் பெறுகிறார்கள் பிறப்பு, இறப்பு, திருமணம் எல்லாம் பதிவாகின்றன.

திருமணம் நிச்சயமானதும் அவரவர் கோயிலுக்கு தெரிவித்துவிடுகிருர்கள். அதை கோயிலில் பதிந்துகொள்ள ஒரு குறிப்பிட்ட தொகை வரியாகவும் கட்டவேண்டும். திருமணத் தன்று இந்த கோயிலிலிருந்து இரண்டு மலர்மாலேகள் வரும் அதையே மணமக்கள் மாலேமாற்றிக் கொள்ள வேண்டும்.

உ

சிவமயம்

# நகரத்தார்களுக்கு வேண்டுகோள்

## தனவைசியர்களும் பஞ்சாட்சர உபதேசமும்

ஆண்மக்களும் பெண்மக்களும் திருமணம் ஆனவர்கள் நம் குருமூர்த்திகளிடம் பஞ்சாட்சர உபதேசம் கேட்டு திருநீறு அணிந்து வருகிற பழக்கம் உண்டு. ஆண்மக்கள் கலாமடத்தில் உள்ள குருமூர்த்திகளிடமும் பெண்மக்கள் துளாவூர் மடத்தில் உள்ள குருமூர்த்திகளிடமும் பஞ்சாட்சர உபதேசம் கேட்டுக் கொண்டு வந்திருக்கிறார்கள்.

## குருஸ்தானம்

கலாமடத்தில் இருந்த குருமூர்த்தி அவர்களும் காசி யாத்திரை சென்றவர்கள் நீண்டநாள் வந்து சேராமல் தேசாந்திரியாக இருந்துவிட்டார்கள்.

நம்குல மக்களும் குருமூர்த்திகள் இருந்து வரவேண்டு மென்று முடிவு செய்து பாதரக்குடியில் ஒரு மடம் ஏற்படுத்தி குருமூர்த்திகளையும் தேர்ந்தெடுத்து பட்டம்கட்டி இருந்துவரும் நாளில் காசியாத்திரை சென்று இருந்த கலாமடம் குருமூர்த்தி அவர்களும் வந்துசேர்ந்தார்கள். நகரத்தார் பெருமக்களும், கூட்டம் வைத்துப்பேசி இரண்டு குருமூர்த்திகளையும் ஆதரித்து வருகிறதென்றும், முன்னமே, எந்த, எந்த குருமூர்த்திகளிடம்

உபதேசம் கேட்டு வந்தபடி, அந்த, அந்த வார்ஸ்தார், ஆதரித்து உபதேசம் கேட்டு வருகிறதென்றும், முடிவு செய்திருக்கிறார்கள்.

அப்பால் சிலகாலம் சென்று கலாமடம் குருமூர்த்தி அவர்களும் அதன் பிறகு பாதரக்குடிமடம் குருமூர்த்தி அவர்களும் காலமானதின் பிறகு சுமார் 4,5 வருஷங்கள், குருமூர்த்திகள் தேர்ந்தெடுக்காமல் இருந்து வந்திருக்கிறது.

பள்ளத்தூர் இரணியூர் கோவில் உ. அ. பெரி. மு. அருணுசலம் செட்டியாரவர்களாலும். மற்றவர், நகரத்தார் பெருமக்களாலும் முயற்சி எடுத்து நம்குருமூர்த்திகளின், வார்சுதார் பிள்ளைகள் 25--30 ஐ வரவழைத்து கல்வி கேள்விகளில் மேம்பாடுடைய, நம்குரு மூர்த்திகள் ஸ்தானத்துக்கு, பொருத்தமாயுள்ள ஸ்ரீல ஸ்ரீ ரவிந்திரர் என்ற காமாக்ஷி சுந்தர தேசியர் அவர்களை 24-5-1964 க்கு குரோதி ஸூ வைகாசி மீ 11 உ தேதியில் தேர்ந்து எடுத்து நம் 9 கோயில் நாட்டுக் கோட்டை நகரத்தார் சமூகமக்களுக்கு குருமூர்த்தியாக இளையாத்தக்குடி கோவிலில் பட்டம் கட்டி கலாமடம் மடாதிபதிகளாக இருந்து வருகிருர்கள். பாதரக்குடிமடத்துக்கும் மேற்படியார்களையே 12—9—1975க்கு இராக்ஷஸ ஸூ ஆவணி 27 உ மடாதிபதியாக நியமித்திருக்கிருர்கள். ஸ்ரீல ஸ்ரீ ரவிந்திரர் என்ற காமாக்ஷி சுந்தர குருமூர்த்தி அவர்களும் பட்டத்துக்கு வந்து கல்வி, கற்றுக் கொண்டிருக்கும், காலத்தில் ஸ்ரீல ஸ்ரீ திருச்சி சுவாமி அவர்களும் நம் சமூகமக்களிடமுள்ள அன்பு அபிமானத்திஞல் பெங்களூர், கெஞ்சனக்கன்னி

கைலாச ஆசிரமங்களுக்கு அழைத்துச் சென்று நல்ல பாண்டியத்தம் பெற்ற குரு சங்கரசாஸ்திரி அவர்களை நியமனம் செய்து வேதம் ஆகமம் சாஸ்திரம் சொல்லிக் கொடுத்தும் பாண்டியத்தியம் பெற்று இருப்பதோடு சமஸ்கிருதத்தில் M. A. பட்டமும் பெற்று இருக்கிறார்கள்.

நம் சமூகமக்கள் திருமணம் ஆகியவர்கள் 19 வயதை அடைந்ததும் நம்குருமூர்த்திகளிடம் பஞ்சாட்சர உபதேசம் கேட்டுக் கொண்டு தினம்தோறும் காலையில் மாலையில் திருநீறு அணிந்து அனுஸ்டானம் செய்து ஜெபம் செய்து கடவுளை வழிபடுவதும் சிறப்புடையதாக இருக்கும்.

## பழநி, அன்னதான மடமும், மஹேஸ்வரபூஜையும்

—❁—

நெற்குப்பை கு. பழ. சு. குடும்பத்தார். 1600ம் ஆண்டுக்கு முன்னர் நமனசமுத்திரத்துக்கு சமீபம் தேக்காட்டூரில் வாழ்ந்து வந்த காலத்தில் உப்புவாணிபம் செய்வதற்காக, பழநி சென்று தேசிகர் வீட்டில் தங்கி இருந்து உப்பு வியாபாரம் செய்ததில் நல்ல லாபம் கிடைத்ததும் தருமம் செய்யவேணுமென்று எண்ணி, நம்குருவாகிய கலாமடம் ஈசான்ய சிவாச்சாரியார் இருப்பிடம்வந்து கேட்டபோது 3 சாதுக்களுக்கு அன்னதானம் செய்யுங்களென்றும் சொல்லி இருக்கிறார்கள். அவர்கள் அறிவுரையைக்கேட்டு, பழநிக்கு வந்து இப்போது பழநி யாண்டவர் குடிகொண்டிருக்கிற இடத்திலே 3 சாதுக்களுக்கு அன்னதானம் செய்திருக்கிறார்கள்.

அடுத்த வருஷமும் உப்பு வியாபாரம் செழிப்பாய் இருந்து நல்லலாபம் கிடைத்திருப்பதாக குருமூர்த்திகளிடம் வந்து சொல்லியதும் 50 சாதுக்களுக்கு அன்னதானம் செய்யுங்களென்றும் நானும் வந்து கலந்து கொள்கிறேனென்றும் சொல்லி இப்போது குன்றக்குடியிலிருந்து பழநிக்கு வருகிற நடைபாதை வழியாக அவர்களும் வந்திருந்து 50 சாதுக்களுக்கு அன்னதானம் செய்திருக்கிறார்கள்.

பழநிய்ம்பதியில் குருமூர்த்திகளின் வாக்குப்படி சாதுக்களுக்கு அன்னதானம் செய்ததை மனதில் எண்ணி நம் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் கொண்டு விற்கப்போயிருந்த நகரங்களிலெல்லாம் வேல் முருகனை வைத்தும் தண்டாயுதபாணியை வைத்தும் வழிபாடு செய்துவருகிறதுடன் வருஷா வருஷம் பூரணையில் மஹேஸ்வர பூஜை நடத்தி அன்னதானமும் செய்து வருகிறார்களென்பதும் நம் சமூக மக்கள் அனைவரும் அறிந்த விஷயம்.

ஆரம்ப காலம் முதல், சந்திராள் சூரியாள் உள்ள காலம் வரையில் நம் சமூக மக்களும் ஸ்ரீ பழநியாண்டவருக்கு வருஷா வருஷம் தொடர்ச்சியாக பழநியில் தைப்பூசத்தில் 5 நாள் மஹேஸ்வர பூஜையும் நடத்தி தினம் 31, மூடை அரிசி வடித்து அன்னதானம் செய்யவும் குன்றக்குடி மடத்தில் சித்திரைமாதத்தையில் கடைசி வெள்ளிக் கிழமையிலிருந்து தொடர்ச்சியாக 5 நாள் மஹேஸ்வர பூஜையும் நடத்திவருவதற்கும், 96, ஊர் நகரத்தார்களும் வருஷா வருஷம் புள்ளி $1\frac{1}{4}$ படி அரிசியும், பணமும் அந்த அந்த ஊர் நகரத்தார்கள் வசூலித்து குன்றக்குடியில் உள்ள பழநியாண்டவர் மடத்துக்கு அனுப்பிவைக்கிற

தென்றும் தீர்மானம் செய்து வைத்திருக்கிறபடி நடைபெற்று வருகிறதென்பதும் நம் சமூகமக்கள் அனைவரும் அறிந்த விஷயம்.

ஆத்மநாத சாஸ்த்திரி அவர்களும், ஈசான்ய சிவாச்சாரி யார் அவர்களும் நம் குருவாக இருந்து நம் குலமக்கள் 502. ஆண்பிளைப் பிள்ளைகளையும் அரவணைத்து வளர்த்து, எல்லா நலன்களும் பெறச்செய்து, லெக்ஷோபலெக்ஷம் மக்க ளாக வளம் பெற வழி வகுத்து இருப்பதால், நம் சந்ததியார் அனைவரும் குருபக்தியுடனும், விசுவாசத்துடனும், சந்திராள் சூரியாள் உள்ள காலம் வரையில், வார்ஸ் பரம்பரையாக இருந்து வர வேணுமென்பதையும் தெரிவித்துக் கொள் கிறோம்.

கலாமடம் குரு மூர்த்திகள் காசியாத்திரை சென்ற காலத்தில், 10–12 வருஷங்களும் அப்பால் ஒரு காலம் கலாமடம் குருமூர்த்திகளும், பாதரக்குடிமடம் குருமுர்த்தி களும் காலமானதின் பிறகு 10,12 வருஷங்கள் நம் சமூக மக்களுக்கு பஞ்சாட்சர உபதேசம் கேட்பதற்கு குருமூர்த்தி கள் இல்லாமல் இருந்ததைமனத்தில் கொண்டு நம் சமூக மக்கள் கூட்டம் வைத்து ஸ்ரீதல ஸ்ரீ ரவீந்தரர் என்ற காமாக்ஷி சுந்தர தேசிகரை குருமூர்த்தியாக தேர்ந்தெடுத்து 24–5-1964 தேதியில் பட்டம் கட்டி இருந்து வருகிறார்களென் பதையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

நம் சமூக மக்களுக்கு என்றென்றைக்கும் குருமூர்த்திகள் வார்ஸ் பரம்பரையாக இருந்து வருவதற்கும். காஞ்சிகாம கோடி பீடம் சங்கராச்சாரியார் சுவாமிகள் இளைய வார்ஸ் தேர்ந்தெடுத்து பட்டம் கட்டிஇருந்து வருவது போல நம்

கலாமடம், பாதரக்குடிமடம் ஸ்ரீல ஸ்ரீ ரவீந்திரர் என்ற காமாக்ஷி சுந்தர தேசியர் அவர்களுக்கும், இளைய வார்சாக ஒரு குருவை தேர்ந்தெடுத்து பட்டம் கட்டி வைக்கிற பழக்கம் ஏற்படுத்தினுல் நம் சமூக மக்களுக்கு என்றென்றைக்கும் நம் கலாமடம் பாதரக்குடி மடத்தில் குருமூர்த்திகள் இருந்து கொண்டே இருப்பார்கள்.

அதற்கு வழி பிறப்பிப்பதற்கும் நம் ஸ்ரீல ஸ்ரீ ரவீந்திரர் என்ற காமாக்ஷி சுந்தர தேசிய குருமூர்த்திகள் சமஸ்கிருதம் படித்து பாண்டித்தியம் பெற்று M.A. பட்டம் பெற்றிருப்பதால் அவர்கள் வார்ஸ் பிள்ளைகளில் சமஸ்க்கிருதம் படித்து பாண்டித்தியம் பெறவாய்ப்பு உள்ள பிள்ளைகளையும் மற்ற பிராமணப்பிள்ளைகள், சமஸ்க்கிருதம் படிக்க விரும்புகிறபிள்ளை களையும் வரவழைத்து நம் பாதரக்குடிமடத்தில் இருந்து படிக்க கூடியபிள்ளைகளை தேர்ந்தெடுத்து 10–12 பிள்ளைகள் சேர்ந்து தங்குவதற்கு இடமும் உடையும் உணவு வசதியும் செய்து படித்துவர ஏற்பாடு செய்ய வேணுமென்பதையும் தெரிவித்து கொள்கிறோம்.

குருமூர்த்திகளின் வார்ஸ் பரம்பரை பிள்ளைகள் சமஸ்க் கிருதம் படிக்கவரும் பிள்ளைகளில் இளையவார்ஸ் பட்டம் கட்டிக்கொள்ள தகுதி உள்ளபிள்ளை ஒருவரை தேர்ந்தெடுத்து பட்டம் கட்டிவைக்க வாய்ப்பு ஏற்படுத்தி கொள்வதுடன், நம் சமூகமக்களுக்கு வாழையடி வாழைபோல், குருமூர்த்திகளும் இருந்து வருவார்களென்பதையும். தெரிவித்துக் கொள் கிறோம்.

கலாமடம், பாதரக்குடிமடம் நகரத்தார் குருமூர்த்தி களையும், துலாவூர் மடம் குருமூர்த்திகளையும் பரம்பரையாக,

அந்த.ஸ்த்தானத்தை அலங்கரிப்பவர்களேயும், மேற்படி மடங்களில் வேதம் சாஸ்த்திரம் ஆகமம் படிப்பவர்களேயும் போஷித்து, ஆதரவு செய்து வருவது ஒன்பது கோவில் நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் மரபு.

மேற் சொல்லிய ஆதரவும் போஷனைகளும் செய்து வருவதற்கு போதிய நிதி வசதியின்மையால், சரிவர செயல் படாமல் இருந்து வருகிறது.

எனவே மேற் சொல்லிய அறப்பணிகளே குறைவின்றி நடத்தி வருவதற்கு, மூலதனம் சேர்ப்பதற்கும் அக்ஷய ஹு வைகாசி மாதம் 1 ஆம் தேதி (15 - 5–1986) தேதியில் நாட்டுக்கோட்டை நகரத்தார் குருமூர்த்திகள் அறநிலே என்று டிரஸ்ட்டும் ஏற்படுத்தி காரைக்குடி ரிஜிஸ்ட்ரார் ஆபீசில். 80 / 86: ஆம் நம்பராக பதிவு செய்திருக்கிறது.

96 ஊர் நாட்டுக் கோட்டை நகரத்தார் பெருமக்கள் அனைவரும் இந்த டிரஸ்ட்டில் அங்கத்தினராக சேர்ந்து, நிதி உதவிகள் செய்து, குரு மூர்த்திகளின் போஷனைகளேயும். வேத ஆகம பாராயணங்கள் படிப்பதையும் நலம் பெற செய்ய வேண்டுகிறோம்.

டிரஸ்ட் அமைப்பாளர்கள்.

1. தலேவர்: திருவாளர். ராம. முத்துப்பழநியப்ப செட்டியார் பாகனேரி.

2. செயலாளர்: திருவாளர் நாக. ராம. இராமஸாமி செட்டியார்—புதுப்பட்டி

3. பொருளாளர்: திருவாளர் அ. ராம. அ. லெ. அ. முவீ. முத்துவீரப்ப செட்டியார் — தேவகோட்டை